[29th September 1958

SRI A. V. P. ASAITHAMBI : பாட புஸ்தகங்களை சர்க்கார் வெளியிடுவதற்காக நாட்டில் இருக்கக்கூடிய எதிர்ப்பு எல்லாம், பாட புஸ்தகங்களை அரசாங்கம் வெளியிட முன் வந்தவுடன் அரசாங்கம் எந்தக் கட்சியைச் சேர்ந்ததாக இருக்கிறதோ அந்தக் கட்சியின் கருத்துப்படித் தான் பாடங்களை வெளியிடுவார்கள் என்ற கருத்து இருப்பதால், அந்த எதிர்ப்பு இருக்கிறது, அம்மாதிரி அரசாங்கம் செய்யாது டெக்ஸ்ட் புக் கமிட்டி எதைத் தீர்மானிக்கிறதோ அதைச் செய்கிறோம் என்ற அபிப்பிராயத்தை அரசாங்கம் வெளியிடுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பாடப் புஸ்தகங்களை வெளியிடுவதில் மந்திரியோ அல்லது அந்த இலாகாவின் உத்யோகஸ்தர்களோ உட்கார்ந்து வெளியிடுவது அல்ல. அல்லது அரசியல் வாதிகளும் வெளியிடுவது அல்ல. அதற்கு என்று தனியாக, அரசியலில் சம்பந்தம் இல்லாத நிபுணர்களையும், புலவர்களையும் கொண்ட, ஒரு கமிட்டியை நியமிக்கிறார்கள். அந்தக் கமிட்டி பாட புஸ்தகங்களை வெளியிடுகிறார்கள். ஆகவே அதில் அனுவசியமாக அரசியல் கருத்துக்களைப் புகுத்தி விடுவார்களோ என்ற பயத்துக்கு இடமே இல்லை.

*Irrigation Advisory Board*

*604 Q.—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether there is any proposal to reconstitute the Irrigation Advisory Board for Cauvery Delta?

THE HON. SRI P. KAKKAN : The Irrigation Advisory Board for Cauvery Delta has recently been reconstituted. There is therefore no proposal to reconstitute it.

*Pumping schemes in Tiruturaipundi taluk*

*605 Q.—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the number of size of motors working in the Ayakarambalam Pumping Station in Tiruturaipundi taluk, Tanjore district;

(b) the acreage benefited thereby;

(c) the number of pumpsets to be installed as per the original scheme;

(d) the steps taken for installation of the remaining motor pumpsets; and

(e) when the remaining pumpsets will be installed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Two 15 h.p. motor pumpsets have been installed by ryots.

(b) 700 acres.

(c) According to the sanctioned scheme motor pumpsets with an aggregate of 60 h.p. are required.

(d) & (e) Two motor pumpsets with an aggregate of 30 h.p. have been installed. So one more motor pumpset to make up the balance of 30 h.p. has to be installed by the ryots. The question of installing the remaining motor pumpset at State cost in the first instance is under consideration.

**Sri A. VEDARATHNAM** : இப்பொழுது இருக்கிற இந்த இரண்டு பம்பு செட்டுகள் மூலமாக அந்தப் பிரதேசங்களில் குறிப்பிட்டிருக்கிற 700 ஏக்கருக்குப் பாசன வசதி அளிக்க முடியுமா ? இல்லையானால் அதற்கு என்ன ஏற்பாடு செய்ய உத்தேசம் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்த 700 ஏக்கருக்குப் பாசன வசதி அளிப்பதற்குப் போதவில்லை. ஆகையால் இன்னும் பம்பு செட்டுகள் வைக்க வேண்டுமென்று இப்பொழுது தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

**Sri M. S. SELVARAJAN** : தாம்பரபரணி கடை அணைக்கீழ்ப் பகுதிக்கு இதை அமுல் நடத்த இப்பொழுது ஏதாவது திட்டம் பரிசீலனையில் இருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : தனியாக கேள்வி கேளுங்கள் பதில் சொல்லுகிறேன்.

**Sri A. VEDARATHNAM** : இன்னொரு பம்ப் செட் வைக்க வேண்டியதை சாகுபடிக்குக் குந்தகம் இல்லாமல், இந்த ஆண்டுக்குள்ளேயே வைப்பதற்கு அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுத்துக்கொள்ளுமா ? 9-30 a.m.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அரசாங்கம் அதைப் பற்றி கவனித்துக்கொண்டுதான் இருக்கிறது.

* 606 *Q*.—Sri A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Thennadar Pumping Scheme in Tiruturaipundi taluk, Tanjore district, has been sanctioned;

(*b*) when the scheme will be taken up for execution;

(*c*) the acreage expected to be benefited by the scheme; and

(*d*) the amount sanctioned therefor?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The Scheme will be taken up for execution shortly.

(*c*) 1,040 acres.

(*d*) Rs. 1,71,000 for works (including cost of pumpsets).

* 607 *Q*.—Sri A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) when will the Valavanar Pumping Scheme in Tiruturaipundi taluk, Tanjore district, be ready for irrigation;

(*b*) the acreage expected to be benefited by the Scheme and

(*c*) the amount sanctioned therefor?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The work has been sanctioned, but it has not yet actually been started. The preliminaries such as preparation of land plans, etc., and other formalities are being attended to. At this stage, it is not possible to say when the scheme would be ready for irrigation.

(*b*) 1,970 acres.

(*c*) Rs. 2,56,780 (for works).